8th August 1960]

(ஆ) மாண்டிச்சோரி முறையில் நடைபெறும் பள்ளிகளில் எத்தனை வகுப்புகள் வரையில் நடத்திவருகிறார்கள் ?

(இ) அந்த முறையில் கல்வி போதிக்கும் ஆசிரியர்களுக்கு போதனா முறைப் பயிற்சிப் பள்ளிகள் இம் மாநிலத்தில் இருக்கிறதா ?

(ஈ) அப்படியானால், எங்கே ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) These schools are treated as schools for special education for purposes of aid. The grant payable in each case is fixed according to the circumstances of the case.

(*b*) There are no fixed classes or standards.

(*c*) Yes, Sir.

(*d*) Arundale Training Centre.

SRI A. VEDARATHNAM : இந்தப் பயிற்சிப் பள்ளியில் பயிற்சி பெறுவதற்காகச் செல்கிற ஆசிரியர்களுக்கு ஜெனரல் க்வாலிபிகேஷன் என்ன இருக்கவேண்டும் ? அந்த மாண்டிசோரி முறையில் நடைபெறுகிற பள்ளியில் மாணவர்கள் எத்தனை வயதில் இருந்து அனுமதிக்கப்படுகிறார்கள் ? எத்தனை ஆண்டு அவர்களுக்கு அங்கே கல்வி போதிக்கப்படுகிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : I want notice.

*Andimadam-Kodukkur road*

* 13 *Q*.—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) when the change of alignment of the Andimadam-Kodukkur road in Tiruchirappalli district was sanctioned by the Government;

(*b*) the reasons for the delay in taking up the formation of the road so far; and

(*c*) the steps taken to overcome the difficulties?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) In April 1959.

(*b*) A portion of the road passes through forest area and for want of permission from the Forest department, the work could not be completed till now.

(*c*) The Divisional Engineer (Highways), Tiruchirappalli, has been instructed to compete the remaining work expeditiously.

*Scholarships to students*

* 14 *Q*.—SRI A. GOVINDASAMY (on behalf of Sri S. M. ANNAMALAI : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1959-60-ம் ஆண்டில் (1) மத்திய சர்க்கார், (2) மாநில சர்க்கார் ஸ்காலர்ஷிப்புக்காக வந்த மனுக்கள் எத்தனை ?

[18th August 1960

(ஆ) இவைகளில் பின்தங்கிய வகுப்பினர், மிகவும் பின் தங்கிய வகுப்பினர், ஹரிஜன மாணவர் ஆகியவர்களிடமிருந்து வந்தவை எத்தனை? அனுமதிக்கப்பட்டவை எத்தனை?

THE HON. SRI P. KAKKAN :

(அ) (1) 8,304 applications for Government of India scholarships.

(2) 115,643 applications for State Government scholarships.

(ஆ) —

| | Number of applications received. | Number of cases granted. |
|---|---|---|
| *State scholarships—* | | |
| Harijans including Scheduled Tribes. | 74,482 | 5 9 22 |
| Backward Classes and most Backward Classes. | 36,829 | 13,006 |
| Denotified tribes .. .. | 4,332 | 1,347 |
| *Government of India Scholarships—* | | |
| Harijans .. .. .. .. | 1,911 | 1,841 |
| Scheduled Tribes .. .. | 26 | 24 |
| Other Backward Classes .. | 6,367 | 1,864 |

SRI A. GOVINDASAMY : பிற்பட்ட இன மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் வழங்குவதில் காலதாமதம் ஏற்படுவதைத் தவிர்க்க அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக் கிறது?

THE HON. SRI P. KAKKAN : காலதாமதம் ஏற்படுவதைத் தவிர்க்க அரசாங்கம் முக்கியமாக ஹரிஜன் வெல்பார் டைரக்டர் பேரிலேயே அக்கவுண்டு ஓப்பன் பண்ணி மாணவர்களுக்கு அவரே பணம் அனுப்புவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அக்கவுண்டு ஆபிசர், ஜூனியர் அக்கவுண்டு ஆபிசர் முதலிய ஸ்டாப்களை எல்லாம் நியமித்து துரிதமாக இவ்வேலையைச் செய்ய வேண்டுமென்றும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதோடு மாணவர்கள் கல்லூரியில் சேரும்போதே அட்மிஷன் பாரத்தோடு ஸ்காலர்ஷிப் பாரத்தையும் பூர்த்தி செய்து கொடுக்கவேண்டு மென்று செய்யப்பட்டிருக்கிறது. இதனால் தலைமை ஆசிரியர்கள் உடனடியாக அவற்றை அனுப்பி வைக்க முடியும். ஜில்லாக் களிலே அங்கங்கே இருக்கிற ஹரிஜன அதிகாரிகள் கலெக்டரின் கீழ் இவற்றை பரிசிலனை செய்து கொடுக்கவும் ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது. அதோடு ஒரு தரம் ஸ்காலர்ஷிப் கொடுத்துவிட் டால் அந்த கோர்ஸ் முடிகிறவரையில் அந்த மாணவனுக்கு உப காரப் பணம் கொடுக்கப்படுவதற்கும் ஏற்பாடு செய்யப்பட்டிருக் கிறது. நம்முடைய உபகாரப் பணத்தை மார்க் அடிப்படையில் கொடுக்க ஏற்பாடாகியிருக்கிறது. மத்திய சர்க்கார் கொடுக்கிற உதவிப் பணத்தை சென்னையில் இருக்கிற கல்லூரி சம்பந்தப் பட்டவரையில் டைரெக்டரே கொடுக்கவேண்டுமென்றும் ஏற் பாடாகியிருக்கிறது.

8th August 1960]

SRI T. S. RAMASWAMI : ஹரிஜனங்களில் 74 ஆயிரம் பேர் மனுச் செய்து கொண்டிருக்கும்போது 59 ஆயிரத்திற்குத்தான் கொடுத்திருக்கிறார்கள். உத்தேசம் 15 ஆயிரம் மாணவர்களுக்கு ஏன் கொடுக்கப்படவில்லை? சாதாரணமாக அந்த பாரம் பூர்த்தி செய்வதில் தவறாக எழுதியிருந்தால்கூட அதைத் திருத்தி அதன் காரணமாக நிராகரிக்கப்பட்டவர்களுக்கு உதவி அளிக்க ஏற்பாடு செய்வார்களா?

THE HON. SRI P. KAKKAN : ஹரிஜனங்களுக்குக்கூட நாம் எல்லோருக்கும் கொடுப்பது என்று அல்ல. ஒதுக்கப்பட்ட தொகைக்குத் தக்கபடிதான் கொடுக்கப்படுகிறது. மேலும் வேண்டுமென்றால் நிதி இலாகாவுக்கு எழுதி சாங்ஷன் பெற வேண்டும். சில மாணவர்கள் தப்பாகவும் பாரத்தை பூர்த்தி செய்து அனுப்புகிறார்கள். அப்போப்பட்டவர்களுக்குக் கொடுக்க முடியாது.

SRI P. S. K. LAKSHMIPATHI RAJU : இந்த அரசாங்கத்தினுடைய ஸ்காலர்ஷிப் பெறவேண்டுமென்பதற்காக பணக்காரர்கள்கூட ஏழைகள் என்பதாக சர்டிபிகேட் வாங்கி அனுப்பி உபகாரச் சம்பளம் பெறுகிறார்களே, அதைத் தடுக்க ஏதாவது நடவடிக்கை எடுக்கப்படுமா?

THE HON. SRI P. KAKKAN : ஏழை மாணவர்களுக்கு உதவி செய்யவேண்டும் என்பதுதான் உத்தேசம். பணக்காரர்கள் வரக்கூடாது என்பதுதான் அரசாங்கத்தினுடைய கொள்கையாகும். அதற்காகத்தான் அதிகாரிகள் சர்டிபிகேட் கொடுக்கும்போது பார்த்துக்கொடுக்கவேண்டும் என்று எச்சரிக்கப்பட்டிருக்கிறார்கள்.

* 15 Q.—SRI S. LAZAR :<br>SRI P. G. MANICKAM : } கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

17—2—1960-ல் நடைபெற்ற இம் மாநில அபிவிருத்திக் கமிட்டிக் கூட்டத்திலே, பின்னடைந்த வகுப்பினர் நலனுக்காகக் கொடுக்கப்படும் கல்வி சம்பந்தப்பட்ட உபகாரச் சம்பளங்களை ஆண்டு தோறும் ஜுலை மாத முடிவுக்குள்ளாக பட்டுவாடா செய்யப்பட வேண்டுமென்ற முடிவின்படி நடவடிக்கைகள் எடுக்கப்பட்டனவா?

THE HON. SRI P. KAKKAN : A statement[a] showing the action taken for the expeditious disbursement of scholarships is placed on the table of the House.

SRI P. G. MANICKAM : மேஜை மீது வைக்கப்பட்டிருக்கிற குறிப்பிலே ரின்யூவல் பாரங்களை மாணவர்களே வாங்கி, எழுதி தலைமை உபாத்தியாயரிடம் கொடுக்கவேண்டுமென்று இருக்

[a] Printed as Appendix I on page 126 infra.